# புழுதிகள் ஓயாது....

நபிகளாரை அவமானப்படுத்துபவர்களுக்கெதிரான
இஸ்லாமியத் தீர்ப்பு.

M q;fpyj;jpy; :
இமாம் அஷ்ஷஹீத் அன்வர் அல் அவ்லாகி ரஹிமஹுல்லாஹ்

**தமிழில்:**

இமாம் உமர் முறாபித்

மிம்பருல் ஹக் பதிப்பகம்

# அறிமுகம்

அளவற்ற அருளாளனின் திருப்பெயரால்.....

நபிகள் நாயகத்திற்கு எதிராக வெளியிடப்பட்ட 'The innocence of Muslims' எனும் திரைப்படத்தினையடுத்து முழு முஸ்லீம் உலகமும் கொதித்துக்கொண்டிருக்கின்றது.ஆர்ப்பாட்டம்,கடையடைப்பு,கொடும்பாவி யெரிப்பு, கொடியெரிப்பு ஏன் சில கொலைகளும் நடந்திருக்கின்றன.முஸ்லீம்கள் தங்களால் எவ்வாறெல்லாம் எதிர்ப்புகளைக் காட்ட முடியுமோ அவ்வாறெல்லாம் காட்டிகொண்டிருக்கின்றனர்.அதற்குக் காரணம் அவர்கள் அண்ணலாரின் மீது வைத்திருக்கும் அபரிதமான அன்புதான். இதனை வைத்துக் கொண்டு சுய லாபம் தேடும் ஒரு கூட்டமும் அரசியல் நடத்திக்கொண்டிருப்பது வேறு கதை.

நபிகளாருக்கு எதிரான காபிர்களின் நடவடிக்கை வரலாற்றிற்கு புதிதானது அல்ல.நபிகளார் தனது தூதை மக்களுக்கு முதன் முதலில் எடுத்துச் சொன்னதிலிருந்தே இந்த வெறுப்பு காபிர்களிடத்தில் உருவாகிவிட்டது.

நபிகளாரின் காலத்தில் காணப்பட்ட ஊடகங்களைக் கொண்டு அவர்கள் தங்கள் எதிர்ப்பினைத் தெரிவித்தனர்.தங்கள் கருத்துக்களைச் சொல்ல நபிகளாரின் காலத்தில் இருந்த முக்கிய ஊடகம்தான் கவிதை.அதனைப் பயன்படுத்தி நபிகளாரை எவ்வளவிற்கு அவமானப்படுத்த முடியுமோ அவ்வளவிற்கு அவமானப்படுத்தினார்கள்.அதே போல் இன்று என்ன வழிகளெல்லாம் இருக்கிறதோ அதனூடாக நபிகளாரை அவமானப்படுத்திக் கொண்டிருக்கின்றனர். இது இஸ்லாத்திற்குப் புதிதல்ல.நாம் இஸ்லாத்தை விட்டு விட்டு அவர்களோடு சேரும் வரைக்கும் இந்த வெறுப்பு தொடர்ந்து கொண்டுதான் இருக்கும்.

அல்லாஹ் கூறுகிறான்,

**"(நபியே!) யூதர்களும், கிறிஸ்தவர்களும் அவர்கள் வழியை நீர் பின்பற்றாதவரையில் உம்மைப்பற்றி திருப்தியடைய மாட்டார்கள்.**

**(ஆகவே, அவர்களை நோக்கி) "நிச்சயமாக அல்லாஹ்வின் வழி-(இஸ்லாம்) அதுவே நேர்வழி" என்று சொல்லும் அன்றி ஞானம் உம்மை வந்தடைந்த பின்னரும் அவர்களுடைய இச்சைகளைப் பின்பற்றுவீரேயானால், அல்லாஹ்விடமிருந்து உம்மைக் காப்பாற்றுபவனும், உமக்கு உதவி செய்பவனும் இல்லை.**"[1]

அன்று நபிகளாருக்கு எதிராக வசைக்கவி படிப்பது,நையாண்டி செய்து கவிதை இயற்றுவது என்பது அவரிகளின் வேலை.இன்று கட்டுரை வரைவது,கார்டூன் வரைவது,குர்ஆனை எரிப்பது,திரைப்படம் தயாரிப்பது என அவர்கள் தங்களின் மூதாதயர்களின் வழியைப் பின்பற்றிக்கொண்டிருகிறார்கள். ஆனால் நாம் எமது மூதாதயர்கள் இச் சந்தர்ப்பத்தில் நடந்து கொண்ட வழியைத் தவற விட்டுவிட்டோம்.

இவ்வாறு நாம் ஒருவர் நபிகளாரை அவமதிக்கும் பொழுது அவர் சம்பந்தமாக இஸ்லாத்தின் நிலைப்பாடு என்ன எனும் கேள்வி ஒன்று எம்மில் எழுவது இயல்பு.

நபிகளாருக்கு எதிரான திரைப்படம் வெளி வந்தபோது உலகில் இருக்கும் பல இஸ்லாமிய அறிஞர்கள் இதன் இஸ்லாத்தின் நிலைப்பாடு எனும் பெயரில் பல கருத்துக்களைக் கூறினர். இலங்கை உலமாக்களும் இதற்கு விதி விலக்குப் பெற்றவர்கள் அல்ல. இத் திரைப்படத்திற்குப் பின்னர் இலங்கையில் பல மேடைகளில்,பல பள்ளிவாசல் குத்பாப் பிரசங்கங்களில் உலமாக்கள் பேசினார்கள். இது சம்பந்தமாக இஸ்லாத்தின் நிலைப்பாடு என்ன,இச் சந்தர்ப்பத்தில் முஸ்லீம்கள் என்ன செய்ய வேண்டும் எனப் பல விடயங்களைப் பற்றிப் பேசினார்கள். இயக்கங்கள் சார்பான உலமாக்களும் தங்களின் இயக்கங்களின் நிலைப்பாட்டைக் குறிப்பிட்டார்கள்.குத்பாக்களில் பேசினார்கள்,வானொலியில் பேசினார்கள்,ஏன் நிகாஹ் மஜ்லிஸுகளில் கூட இதனைப் பற்றிப் பேசினார்கள்.

அவர்கள் பேசியதின் சுருக்கமென்னவென்றால் நபிகளாரை யாராவது அவமானப் படுத்தினால் நாம் அவரை மன்னிக்க வேண்டும்.அவருக்காகத் துஆச் செய்ய வேண்டும்,அவருக்கு இஸ்லாத்தைப் பற்றிச் சொல்லிக் கொடுக்க வேண்டும்,

---

[1] அல் பகறா: 120

அவருக்கு த.்.வாச் செய்ய வேண்டும்.நபிகளாரைப் பற்றி நாமும் நல்ல பல கார்டூன்களை வரைய வேண்டும்,நல்ல திரைப்படங்களை எடுக்க வேண்டும்,ஆர்ப்பாட்டங்களில் ஈடுபட்டு அன்றாட நிலைமைகளைச் சீர் குலைத்து விடக்கூடாது.அவ்வாறு செய்தால் இஸ்லாத்தினைப் பற்றிய பிழையான அபிப்பிராயமே தோன்றும்.இதுதான் எமது உலமாக்கள் இவ்விடயம் சம்பந்தமாக எமக்குச் சொல்லித் தந்தவை.

நபிகளாரை அவமானப்படுத்தியவனை எவ்வாறு நபிகளார் நடாத்தினார்கள்?அது பற்றி ஆரம்பகால அழுக்கில்லாத தூய இமாம்கள் என்ன கூறினார்களா? என்பதைப் படித்தபோது அவர்கள் சொன்னதற்கும் இன்றைய உலமாக்கள் சொல்வதற்கும் இடையில் ஏணி வைத்தாலும் எட்டாதது எங்களுக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது.

நபிகளாரை அவமானப்படுத்தியவனுக்கு என்ன செய்ய வேண்டும் என்பதில் இஸ்லாமிய அறிஞர்களுக்கிடையில் ஒருமித்த கருத்திருக்க இன்றைய உலமாக்கள் சொல்வதைக் கேட்கும் போது மிகவும் வேதனையாக இருக்கிறது.

எமது உலமாக்கள் இதனையெல்லாம் தெரியாமல் செய்கின்றார்களா அல்லது தெரிந்து கொண்டே மறைக்கிறார்களா அல்லது உண்மையைச் சொல்லப் பயப்படுகிறார்களா? என்பதுதான் புரியவில்லை. அவ்வுலமாக்களுக்கு இவை தெரியவில்லையென்றிருந்தால் இந்தச் சிறிய நூலின் மூலம் தெரிந்து கொள்ளட்டும்.அவர்கள் தெரிந்து கொண்டுதான் செய்கின்றனர் என்றிருந்தால் அவர்களுக்கு நரக நெருப்பைக் கொண்டு நாம் அச்சமூட்டி எச்சரிக்கை செய்ய விரும்புகிறோம். அவர்கள் உண்மையைச் சொல்லப் பயப்படுகிறார்கள் என்றிருந்தால் அதிகம் பயப்படுவதற்குத் தகுதியானவன் அல்லாஹ் என்பதை அவர்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறோம்.

மக்களும் உலமாக்கள் சொல்வதெல்லாம் சரிதான் என்று கண்மூடித்தனமாக நம்பிக் கொண்டிருக்கின்றனர். என்ன சொல்கின்றார்கள் என்று பார்ப்பதை விட்டு விட்டு யார் சொல்கின்றார்கள் என்றே பார்க்கின்றனர் மக்கள்.

நபிகளாரை அவமானப்படுத்துபவனை இஸ்லாம் எவ்வாறு பார்க்கின்றது? அவன் பற்றிய தீர்ப்பு என்ன? முஸ்லீம் இது சம்பந்தமாகச் செய்ய வேண்டியது என்ன என்று குர்ஆன், சுன்னாவின் அடிப்படையில் மக்களுக்குத் தெளிவுபடுத்த வேண்டியதன் அவசியத்தை மிம்பருல் ஹக் உணர்கிறது.

இது பற்றி ஏற்கனவே இமாம் ஷஹீத் அன்வர் அல் அவ்லாகியவர்கள் ஆங்கிலத்தில் டானிஷ் மற்றும் ஸ்வீடிஷ் கார்டூன் வெளியாகியபோது பேசிய 'The Dust will never settle down'எனும் அவரது பேச்சை மொழி பெயர்ப்பது மக்களுக்கும், உலமாக்களுக்கும் மிகவும் பலனளிக்கும் என மிம்பருல் ஹக் கருதியது. அதனால் உருவானதுதான் இந்த மொழிபெயர்ப்பு. இமாம் அவ்லாகியவர்களைப் பற்றிய அறிமுகம் பின்னட்டையில் தரப்பட்டுள்ளது.

இஸ்லாத்தில் பதிப்புரிமை என்பது கிடையாது. இந்தச் சிறு நூலை யாரும் பிரதியெடுக்க முடியும். வசதி படைத்தவர்கள் இதனைப் பிரதியெடுத்து மக்களுக்கு வினியோகிக்குமாறு அன்பாய் வேண்டிக்கொள்கிறோம்.மேலதிக விபரங்கள் தேவையானவர்கள் எம்மை மின்னஞ்சல் மூலம் தொடர்பு கொள்ள முடியும்.

எம் பெருமானர் மீது சாந்தியும் சமாதானமும் உண்டாகட்டும்.

-c ku; Kwhgj;-

-மின்பருல் ஹக் வெளியீட்டகம்

# இமாம் அன்வர் அல் அவ்லாகியைப் பற்றி..

ஷஹீத் இமாம் அன்வர் அல் அவ்லாகி அவர்கள் 1971 ஏப்ரல் 21ல் நியூ மெக்ஸிக்கோவில் பிறந்த எமனிய பாரம்பரியத்தைக் கொண்ட ஒரு முஸ்லிம் அறிஞராவார். அவர் கலிபோர்னியாவில் ஒரு பள்ளிவாயலில் இமாம் ஆக பணிபுரிந்து பின்னர் அல் ஹிஜ்ரா இஸ்லாமிய மையம் மேலும் ஜார்ஜ் வாஷிங்டன் பல்கலைக்கழகத்திலும் கடமை புரிந்தார். 2004 இல் எமன் திரும்பிய இமாம் அவர்கள் 2006ல் கைது செய்யப்படும் வரை எமன் பல்கலைக்கழகத்தில் கற்பித்தார். 2007 ஆம் ஆண்டு டிசம்பர் 12 அன்று காவலில் இருந்து விடுதலை செய்யப்பட்டார்.அங்கு ஒன்றரை வருடங்கள் சிறையில் கழித்திருந்தார். சிறையில் இருந்து வெளிவந்த பின்னர் அவர் எமன் முஜாஹிதீன்களோடு சேர்ந்து சர்வதேச ஜிஹாதிற்கான பேச்சாளராக மாறினார்.ஆங்கிலம் பேசும் மேற்கத்திய முஸ்லிம்களுக்கு ஜிஹாத் பற்றிய செய்தியைக் கொண்டு சென்றவர் இவரே.இவருடைய கருத்துக்கள் அமெரிக்க அரசாங்கத்தை தலைவலிக்கு உள்ளாக்கியது.தூய இஸ்லாத்தின் கருத்துக்களை தயக்கமின்றி பேசியவர்களுள் இவரும் ஒருவர்.எளிய நடையில் பல அற்புதமான கருத்துக்களை கூறிய இமாமவர்கள் பல்லாயிரம் இளைஞர்களின் வாழ்வை இஸ்லாத்தின்பால் மாற்றியவராவார்.

<u>இமாம் அவ்லாகியின் இஸ்லாமிய அறிவு</u>

அப்துர் ரஹ்மான் ஸுமைலா அல் அஹ்தல் அவர்களிடம் புஹாரி, முஸ்லிம் மற்றும் முஅத்தா மாலிக் போன்ற கிரந்தங்களைக் கற்று அதற்கான இஜாசாக்களைப் பெற்றுக்கொண்டார்.

ஷெய்க் அப்துர் ரஹ்மான் அல் அஹ்தல் ,ஷெய்க் ஹாமித் அல் அஹ்தல் போன்றோரிடம் ஷாபிஈ பிக்ஹின் நூலான இமாம் நவவியின் அல் மின்ஹாஜைக் கற்றார்.

அத்தோடு ஆறு ஹதீத் கிரந்தங்களையும் இமாம் நவவியின் அல் அத்கார் எனும் நூலையும் காழி இயாழின் அஷ்ஷிபாவையும் மேற்குறிப்பிட்ட அறிஞர்களிடம் கற்றார்.

ஷெய்க் ஹஸன் அல் அஹ்தல் அவர்களோடு அதிகமான காலங்கள் இமாம் அவ்லகியவர்கள் இஸ்லாமிய அறிவினைப் பெற்றுக்கொண்டார்.

அவரிடமிருந்து இப்னு ஹஜரின் புலூகுல் மராம், அல் மக்தசியின் உம்ததுல் அஹ்காம்,இமாம் நவவியின் மின்ஹாஜ்,அபூ சுஜாவின் கயா வத் தக்ரீப்,ஜுவைய்னியின் வரகத் போன்ற நூல்களை இமாம் அவ்லகியவர்கள் ஷெய்க் அஹ்தலிடமிருந்து கற்று அதற்கான இஜாசாவையும் பெற்றுக்கொண்டார்.

மேலே குறிப்பிடப்பட்ட இஜாசாக்களைத்தவிர பொதுவாக இமாம் அவல்கி குர்ஆன்,உலூமுல் குர்ஆன்,ஹதீத்,உலூமுல் ஹதீத்,தப்சீர்,பிக்ஹ்,உசூலுல் பிக்ஹ்,அரபு போன்ற துறைகளில் பாண்டித்தியம் பெற்றுள்ளார்.

இமாம் அன்வர் அல் அவ்லாகியின் ஆசிரியர்களில் சிலர் வருமாறு,

ஷெய்க் உதைமீன்

ஷெய்க் சல்மான் அல் ஔதா

ஷெய்க் ஹஸன் மக்பூல் அல் அஹ்தல்

ஷெய்க் ஹஸன் பின் மஹ்பூத்

ஷெய்க் அப்துர் ரஹ்மான் அல் அஹ்தல்

ஷெய்க் ஹாமித் சுமைாஅல் அஹ்தல்

ஜிஹாத் பற்றிய பல விளிப்புனர்வுகளை ஏற்படுத்தியமையால் பாதிக்கப்பட்ட அமெரிக்க அரசாங்கம் இவரை கொல்லுமாறு பணித்தது. 2011செப்டம்பரில் அமெரிக்க வான்படைத் தாக்குதலின் போது ஷஹீதாக்கப்பட்டார். இவரின் மறுமை, நபிமார்களின் சம்பூர்ண வரலாறு, இறுதித் தூதரின் வரலாறு போன்ற பேச்சுக்கள் பிரசித்தமானவை. இவருடைய பேச்சுக்கள் அனைத்தும் ஆங்கிலத்தில் இருந்தாலும் அனைத்து சகோதர சகோதரிகளும் கேட்பதன் மூலம் சிறந்த பயனை அடைந்து கொள்ளலாம்.

பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்

அஸ்ஸலாமு அலைக்கும்

அல்லாஹ் அல்குர்ஆனில் கூறுகின்றான்,

**“அவ்விரண்டு ஊர்களிலுள்ள பெரிய மனிதர் மீது இந்தக் குர்ஆன் இறக்கப்பட்டிருக்க வேண்டாமா? என அவர்கள் கேட்கின்றனர்”**[2]

இங்கு குறிப்பிடப்பட்ட இரு நகரங்கள் மக்காவும் தாயிபுமாகும். நிராகரிப்பாளர்கள் நபித்துவத்திற்காக இரண்டு நபர்களைப் பிரேரித்தனர். ஏனெனில் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லலம் அவர்களுக்கு நபிப்பட்டம் கொடுக்கப்பட்டதை அவர்களில் சிலர் ஆட்சேபித்தனர்.

**“இன்னும் அவர்களிடம் ஏதாவதொரு வசனம் வந்தால் ‘அல்லாஹுடைய தூதருக்குக் கொடுக்கப்பட்டதைப் போல் நாங்கள் கொடுக்கப்படாதவரை விசுவாசிக்க மாட்டோம்’ என்று கூறுகின்றனர்.அல்லாஹ் தன்னுடைய தூதுத்துவத்தை எங்கு (எவருக்கு) ஆக்குவது என்பதை நன்கறிந்தவன்”**[3]

நிராகரிப்பாளர்கள் பிரேரித்த அவ்விருவரில் ஒருவர் தாயிபைச் சேர்ந்த உர்வா பின் மஸ்ஊத் அத்தகாபி ஆகும். பல வருடங்கள் கழித்து ஹுதைபியா உடன்படிக்கையின் போது நபிகளாரிடம் பேரம் பேசுவதற்காக நிராகரிப்பாளர்களால் அனுப்பப்பட்டவர்.

அவ்வுடன்படிக்கையைப் பூர்த்தி செய்வதில் உர்வா வெற்றி பெறாவிட்டாலும் (பின்னர் அவ்வுடன்படிக்கை ஸுஹைல் பின் அம்ர் அவர்களால் கைச்சாத்திடப்படட்டது) நபிகளாரைச் சந்திக்க ஹுதைபியாவிலுள்ள (மக்காவில் இருந்து தெற்கே ஒரு நாள் பயணதூரம்) முஸ்லீம்களின் முகாமிற்கு சமுகமளித்த போது உர்வா பின் மஸ்ஊத் ஒரு புது உலகையே கண்டார்கள். உர்வா பின் மஸ்ஊத் ரழியல்லாஹு அன்ஹு (பின்னர் இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டார்) நபிகளாரைச் சந்திக்க வந்த போது தான்

---

[2] (அஸ் ஸுஹ்ருப்:31)
[3] (அன்ஆம்:124)

காண நேரிட்ட விடயங்களால் வியந்து போனார். நபிகளார் வுழூச் செய்தால், அன்னாரின் உடம்பிலிருந்து வழியும் நீர்த் துளிகளைச் சேகரித்து தங்களின் முகங்களிலும் கைகளிலும் பரக்கத்திற்காகத் தேய்த்து கொள்ள ஸஹாபாக்கள் விரைந்து ஓடுவதையும், அண்ணலாரிடமிருந்து ஒரு முடி விழுந்தாலும் அதனைப் பெற்றுக் கொள்ள அவர்கள் முண்டியடிப்பதையும் உர்வா அவதானித்தார்.

உர்வா அவர்கள் நபிகளாரிடம் பேசிக் கொண்டிருக்கும்போது கண்கள் தவிர முழு உடம்பையும் மறைத்த நிலையில் ஒருவர் நபி அருகில் நின்றுகொண்டு நபிகள் நாயகத்தின் தாடியைப் பிடிப்பதற்காக உர்வா கையை நீட்டும் போதெல்லாம் தன்னுடைய வாளின் பிடியினால் உர்வாவின் கையை அம்மனிதர் தட்டிவிட்டுக் கொண்டே ‘‘உமது கை உம்மிடம் வராமல் இருப்பதற்கு முன்னர் அதனை எடுத்துக்கொள்ளும்’’ என்று கூறுவார். அதைக் கேட்ட உர்வா பின் மஸ்ஊத் ‘‘இந்த மனிதன் தான் உங்களில் உள்ளவர்களில் மிகவும் கடுமையானவரும் கொடுமையானவரும் என நினைக்கிறேன் யார் இவர்? என்று கேட்டார்.

நபிகளார் நகைத்துக்கொண்டே ‘‘இவர் தான் உமது மருமகன் அல் முஹீரா இப்னு சுபா’’ என்று பதிலளித்தாரகள்.

முஹீரா அவர்கள் உர்வா பின் மஸ்ஊதின் மருமகனாக இருந்தும் கூட முஸ்லிம் என்ற காரணத்தினால் நபிகளாரின் பாதுகாப்பில் மிகவும் கவனமாக இருந்தார். தன்னுடைய மருமகனாக இருந்தும் கூட நபிகளாரை நோக்கி கைநீட்டுவதை முஹீரா அனுமதிக்காதது உர்வாவை மிகவும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

சகோதர சகோதரிகளே, இச்சம்பவத்தை நான் அதிகம் மீட்டுவதைக் கேட்டிருப்பீர்கள். இவ்வாறான சம்பவங்களை நாம் கேட்கும் போதெல்லாம் அவர்களின் நிலையில் நின்று அவர்கள் சிந்திக்கும் விதத்தில் நாமும் சிந்தித்து அவர்களைச் சூழக் காணப்பட்ட நிலைமைகளை விளங்கிக் கொள்ள முயல வேண்டும். அது கோத்திர சமூகம். குடும்பப் பிணைப்புகள் தான் அவர்களுக்கு எல்லாமே. முஹீரா பின் சுபாவை இஸ்லாம் எத்தனை தூரம் மாற்றியிருக்கிறது என்பதை அவர் தன்னுடன் நடந்து கொள்ளும் விதத்திலிருந்தே அறிந்த உர்வா மிகவும் ஆச்சரியப்பட்டார்.

குறைஷியரிடம் சென்ற உர்வா பின் மஸ்ஊத் கூறினார். **“ஓ குறைஷியரே, நான் உலக அரசர்களிடம் விஜயம் செய்திருக்கிறேன். சீசரிடமும், பாரசீகப் பேரரசனான கிஸ்ராவினதும், நேகஸினதும் சபையில் அமர்ந்திருக்கிறேன். முஹம்மதைப் பின்பற்றுபவர்கள் அவரைப் பின்பற்றுவதைப் போன்று வேறு எந்தத் தலைவர்களையும் அவர்களது மக்கள் பின்பற்றுவதை நான் கண்டதே இல்லை. முஹம்மதை அவர்களது தோழர்கள் அடிபணிவதைப் போல் எந்த அரசருக்கும் அவர்களின் மக்கள் அடிபணிவதை நான் கண்டதேயில்லை. அவர் கட்டளையிடும் போதெல்லாம் அதனைச் செய்வதற்கு அவர்கள் விரைகின்றனர். அவர் ஏதாவது பேசினால் தலையில் பறவைகள் இருப்பது போன்று அசையாமல் செவிமடுக்கின்றனர். ஓ குறைஷியரே, முஹம்மத் உங்களுக்கு ஏதாவது ஒன்றைப் பிரேரித்தால் அதை ஏற்றுக் கொள்ளுங்கள். ஏனெனில் அவரைப் பின்பற்றுபவர்கள் அவரைக் கைவிடுவார்கள் என்று நான் நினைக்கவேயில்லை”[4]**

நிராகரிப்பாளர்கள் முஸ்லீம்களைக் கண்டால் இவ்வாறுதான் எண்ணிக் கொள்வார்கள் ‘‘அவர்கள் அவரை கைவிடவே மாட்டார்கள். அவர்கள் அவருக்கு துரோகம் இழைக்கவே மாட்டார்கள்.அவர்கள் அவரை விட்டுச் செல்லவேமாட்டார்கள். அவருடைய பாதுகாப்பிற்காக இறுதி மனிதர் வரைக்கும் போராடுவார்கள்’’.

ஆனால் காலங்கள் வேறு. அது நபிகளாரின் காலம். அவர்கள் ஸஹாபாக்கள். அவர்களைக் கண்டவர் உர்வா பின் மஸ்ஊத். ஆனால் இன்றைய காலம் வேறு.

சில நாட்களுக்கு முன்னர் அமெரிக்கப் படை வீரர் ஒருவரால் அல்லாஹ்வின் வேதப்புத்தகம் இலக்கிற்குள்ளானது. இது முஸ்லிம் உலகத்தின் இதயத்தில் உள்ள ஒரு முஸ்லீம் நாட்டில் நடந்தது. அதற்கு முஸ்லீம்களின் பதில் வெறும் மௌனம் மாத்திரமே! ஆரம்பத்தில் டேனிஷ் கார்ட்டூன் பிரச்சினை எழுந்த போது முஸ்லீம் உலகம் கொந்தளித்தது. ஆனால் அதை விட மோசமான சுவிடிஷ்

4 (புஹாரி பாகம் 5. ஹதிஸ் 891)

கார்ட்டுன் வந்த போது எமது எதிர்ப்பலை மிகவும் குறைவாகவே இருந்தது.

சகோதர சகோதரிகளே எதிரிகள் எம்மை உணர்வற்றவர்களாக ஆக்கிவிட்டார்கள்.

முதல் முதலாக அது நடந்தபோது ஒவ்வொருவரும் அதனைப் பற்றிச் சிந்தித்தார்கள். அதனைக் கண்டித்தார்கள். அதனைப் பற்றிக் கவனமெடுத்தார்கள். மெது மெதுவாக நாம் அதற்குப் பழக்கப்பட்டுவிட்டோம்.

இப்பொழுது மிகவும் பாரிய அளவில் விடயங்கள் நடக்கின்றன. பெரிய அளவில் தெய்வ நிந்தனை நடக்கின்றது. எமது பிரதிபலிப்பு எவ்வாறு இருக்கிறது? மிகவும் கொஞ்சம்.

சகோதர சகோதரிகளே சற்று திரும்பிச் சென்று விடயங்கள் எவ்வாறு ஆரம்பத்தில் இருந்தன எனப் பார்ப்போம். ஏனெனில் அதுதான் எமது ஆத்மாக்ளைப் புத்துணர்வூட்டும், இவ்வாறு தான் நாம் ஸஹாபாக்களைப் பின்பற்ற வேண்டும் என்று எமக்குத் தெளிவாகும்.

கஅப் இப்னு அஷ்ரப் ஒரு யூதத் தலைவன். ஒரு மிகச் சிறந்த கவிஞனும் கூட. பத்ர் யுத்தத்தில் முஸ்லீம்கள் வெற்றி பெற்ற செய்தி மதீனாவில் பரவிய போது செவியுற்ற கஅப் இப்னு அஷ்ரப் ‘‘இந்தச் செய்தி உண்மையாக இருந்தால் பூமிக்கு மேல் இருப்பதை விட அதற்கு கீழ் இருப்பதே சிறந்தது. அதாவது குறைஷிக் காபிர்கள் தோற்ற பின்னரும் வாழ்வதில் என்ன அர்த்தம் இருக்கின்றது. நாம் இறப்பதே மேல்’’ என்று கூறியவன்.

அதுமட்டுமன்றி முஷ்ரிகீன்கள் தோல்வியடைந்ததற்காக வருந்தி நபிகளாருக்கும், முஸ்லீம்களுக்கும் எதிராக அவன் கவிதைகள் இயற்றத் தொடங்கினான். மக்காவிற்குச் சென்று அக்கவிதைகளை குறைஷியர்களிடம் படித்துக் காட்டி அவர்களின் இழப்பிலும் பங்கு கொண்டான். அதுமட்டுமல்லாது தன்னுடைய கவிதைகளில் முஸ்லீம் பெண்களைப் பற்றி கொச்சையாகக் குறிப்பிடவும் ஆரம்பித்தான். எனவே நபிகளார் ‘‘கஅப் இப்னு அஷ்ரபைக் கவனித்துக் கொள்பவர் யார்? ஏனெனில் அவன் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் துன்புறுத்திவிட்டான்’’ எனக் கேட்டார்கள்.அவ்ஸ் கோத்திரத்தைச்

சேர்ந்த முஹம்மத் பின் மஸ்லமா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ''நான் கவனித்துக் கொள்கிறேன் அல்லாஹ்வின் தூதரே! நான் அவனைக் கொல்ல வேண்டுமா?'' என வினவ நபிகளார் ''ஆம்'' எனப் பதிலளித்தார்கள்.

முஹம்மத் பின் மஸ்லமா ரழியல்லாஹு அன்ஹு கஅப் இப்னு அஷ்ரபை கொல்வதாக வாக்களித்துவிட்டார். அவர் வீட்டுக்குச் சென்று இதனைப் பற்றிச் சிந்தித்தார். அது மிகவும் கடினமான வேலையாகத் தோன்றியது. கஅப் இப்னு அஸ்ரப் யூதர்களுக்கு மத்தியில் ஆதரவாளர்கள் சூழக் கோட்டையில் வாழ்பவன். இது மிகவும் கடினமான பணி. இதைப் பற்றிய சிந்தனையில் உயிர் வாழ்வதற்குப் போதுமானதைத் தவிர அவரால் உண்ணவோ குடிக்கவோ இல்லை.

இச்செய்தி கேள்விப்பட்டவுடன் நபிகளார் அவரை அழைத்து விசாரித்தார்கள். ''முஹம்மத் பின் மஸ்லமாவே உமக்கு என்ன நேர்ந்தது? உண்பதையும் குடிப்பதையும் நீர் நிறுத்திவிட்டாய் எனக் கேள்விப்பட்டேனே?'' என்று அதற்கான காரணத்தை நபிகளார் வினவிய போது ''நான் ஒரு விடயத்தைச் செய்வதாக உங்களிடம் வாக்களித்தேன். அதனைப் பூர்த்தி செய்வதில் வெற்றி பெறுவேனா? எனப் பயப்படுகிறேன்'' என முஹம்மத் பின் மஸ்லமா ரழியல்லாஹு அன்ஹு பதிலளித்தார். அதைக் கேட்ட நபிகளார் ''நீர் செய்ய வேண்டியதெல்லாம் ஒரு முயற்சி மாத்திரமே. மீதத்ததை அல்லாஹ்விடம் விட்டுவிடும்'' என கூறினார்கள். அதற்கு முஹம்மத் பின் மஸ்லமா கூறினார் ''அவ்வாறென்றால் அல்லாஹ்வின் தூதரே, உங்களுக்கு எதிராக நான் அவனிடம் பேசுவதற்கு நீங்கள் அனுமதி தர வேண்டும். ''உமக்கு விரும்பியதைக் கூறும்'' என நபிகளார் பதிலளித்தார்கள்.

இவ்விடத்தில் நிறுத்தி விட்டு ஸஹாபாக்களின் வேகத்தையும் தியாகத்தையும் சற்று கூர்ந்து நோக்குவோம்.

எவ்வாறு அதனைச் செய்து முடிப்பது என யோசித்து யோசித்து அந் நபித்தோழரால் உண்ணவோ குடிக்கவோ,அவருடைய அன்றாட வாழ்க்கையில் ஈடுபடவோ முடியவில்லை. நபிகளார் 'நீர் உமது பணியைச் செய்வீராக மீதத்தை அல்லாஹ்விடம் விட்டு விடு' என்று

கூறிய பின்னரே ஆறுதல் அடைந்து உண்ணவும் குடிக்கவும் ஆரம்பித்தார்.

**ஆனால் நாம் இவ்விடயத்தில் எத்தனை கவனமாக நடந்து கொள்கிறோம்? நபிகளாரின் கௌரவம் என்று வரும் போது எத்துணை அக்கரையாக இருக்கிறோம்? அல்லாஹ்வின் வேதத்தின் கௌரவம் என்று வருகின்ற போது எவ்வளவு தூரத்திற்கு அதனை எடுத்துக் கொள்கிறோம்?.**

மூன்று நாட்களாக முஹம்மத் பின் மஸ்லமா தான் கொடுத்த வாக்கிற்காக இரவும் பகலும் சிந்தித்துக் கொண்டிருந்தார். ஸஹாபாக்களின் அந்த உறுதிப்பாடு எமக்கும் வர வேண்டும். முஹம்மத் பின் மஸ்லமாவும் அவ்ஸ் கிளையைச் சேர்ந்த அன்சார்களின் ஒரு சிறு கூட்டமும் கஅப் இப்னு அஷ்ரபிற்கு முதல் பொறியை வைப்பதற்காக அவனைச் சந்திக்கச் சென்றனர். அவர்கள் கஅபிடம் வந்து,

''இந்த மனிதர் (முஹம்மத்) அல்லாஹ்விடமிருந்து ஒரு சோதனையாக வந்திருக்கிறார். பிரச்சினையையும் அழிவையும் எங்களுக்குக் கொண்டு வந்திருக்கிறார். அவரால் முழு அரேபியரும் எங்களை எதிரிகளாக நினைத்துப் போரிடுகின்றனர்'' என்று கூறினர்.

அதற்கு கஅப் ''இதை விட மோசமான காலங்களை நீங்கள் சந்திப்பீர்கள் என நான் ஏற்கெனவே கூறினேனே'' என்று கூறினான். அதற்கு முஹம்மத் பின் மஸ்லமா ''இவையனைத்தும் எவ்வாறு முடிவடைகிறது என்று பார்க்க நாங்கள் ஆவலாக இருக்கிறோம். கஅபே, எங்களது பொருளாதார நிலைமைகள் மோசமாகப் பாதிக்கபட்டிருக்கிறது. உம்மிடமிருந்து சில பொருட்களை நாம் இரவலாகப் பெற விரும்புகிறோம். அதற்காக உம்மிடம் ஒரு உத்தரவாதத்தையும் விட்டுச் செல்ல விரும்புகிறோம்'' எனக் கூறினார். அதற்கு கஅப் ''நல்லது. அவ்வாறாயின் உங்கள் குழந்தைகளை என்னிடம் விட்டுச் செல்லுங்கள்'' எனக் கூற மஸ்லமா அவர்கள் ''உம்மிடம் எமது குழந்தைகளை விட்டுச் சென்றால் உங்கள் பெற்றோர் உங்களை சிறு தொகைக்காக அடமானம் வைத்துவிட்டார்கள் என அவர்களின் முழு வாழ்நாளிலும் மக்கள்

கூறிக்கொண்டிருப்பார்கள். இது அவர்களுக்கு ஒரு அவமானமாகப் போய்விடும்'' எனக் கூறினார்கள். அதற்கு அவன் ''அப்படியானால் உங்கள் பெண்களை விட்டுச் செல்லுங்கள்'' என கூறினான். அதற்கு முஹம்மத் பின் மஸ்லமா அவர்கள் ''நீர் மிகவும் அழகான ஆணாக இருக்க எவ்வாறு எமது பெண்களை உம்மிடம் விட்டுச் செல்வது? அதற்குப் பதிலாக எமது ஆயுதங்களை எம்மோடு கொண்டுவந்து உம்மிடம் விட்டுச் செல்கிறோம்'' என்று கூறினார்கள். கஅபும் அதற்கு ஆமோதித்தான். அடுத்த முறை அவர்கள் ஆயுதங்களைக் கொண்டுவரும் போது அவன் சந்தேகப்படக் கூடாது என்பதற்கே முஹம்மத் பின் மஸ்லமா இந்த வியூகத்தைத் தீட்டினார்கள்.

இரவு நேரமே பொருத்தமாக இருக்கும் என்பதால் இரவில் வந்து அவனைச் சந்திப்பதாகக் கூறிவிட்டுச் சென்றுவிட்டார்கள். இரவில் வந்து அவர்கள் அவனை அழைத்த போது அவனுடைய மனைவி ''இந்த குரலில் நான் இரத்தத்தை நுகர்கிரேன்'' எனக் கூறினாள். அதற்கு கஅப் ''கவலைப்படாதே! முஹம்மது பின் மஸ்லமா எனது நண்பர். எனது சகோதரர் அபூ நெய்லாவும் அவர்களோடு இருக்கிறார்'' என்று கூறிவிட்டு அவர்களைச் சந்திக்கச் சென்றான். அவர்களுகிடையில் அறியாமைக் காலத்தில் இருந்து நெருக்கமான உறவு இருந்திருக்கிறது என்பது இதிலிருந்து புலனாகிறது. முஹம்மத் பின் மஸ்லமா தனது நண்பர்களை அழைத்து ''நான் அவனது தலையைப் பற்றிப் பிடிப்பதைக் கண்டால், அவனை நீங்கள் கூறு கூறாகக் கிழித்துவிடுங்கள்'' என்று கூறினார்.

கஅப் கீழே வந்து அவர்களைச் சந்தித்தான். அவர்கள் கஅபிடம் ''ஏன் நாம் ஷாப் அல் அஜூஸிக்கு சென்று இரவை அங்கு கழிக்கக் கூடாது? என வினவ ''அவ்வாறே செய்யலாம்'' என்று அவன் கூறினான். அவனுடைய கோட்டையில் இருந்து அவனை வேறுபடுத்தி வேறொரு இடத்திற்கு கொண்டு வருவதே அவர்களின் திட்டமாக இருந்தது.

அவ்விடத்தை அடைந்ததும் முஹம்மத் பின் மஸ்லமா ''ஆஹா! உம்மிடமிருந்து வரும் நறுமணம் மிகவும் அற்புதமானது. நான் நுகர்ந்து பார்க்கவா? என ஆரம்பித்தார். அவன் ''சரி'' எனக் கூற

முஹம்மத் பின் மஸ்லமா அவன் தலையைத் தன்பக்கமாக இழுத்து நுகர்ந்துவிட்டுக் கூறினார்கள். ‘‘அற்புதமான சுகந்தம்’’

மறுமுறையும் அவர்கள் ‘‘நான் இன்னொரு தடவை நுகரவா?’’ என்று கேட்டார்.அதற்கு கஅப் ‘‘சரி’’ எனக் கூற இரண்டாவது முறையும் கஅபை அவர் பக்கம் இழுத்த போது வாள்கள் அவனது உடம்பைப் பதம் பார்த்தன. இருந்தாலும், அவை அவனைக் கொல்வதற்குப் போதுமதானதாக இருக்கவில்லை. வலியில் அவன் அலறிய சப்தத்திற்கு கோட்டையிலிருந்த அனைத்து வெளிச்சங்களும் ஏற்றப்பட்டன. முஹம்மத் பின் மஸ்லமா கூறினார்

‘‘என்னிடம் ஒரு குத்து வாள் இருந்தது ஞாபகத்திற்கு வந்தது. அதனை எடுத்து அவனது கீழ்எலும்பு உடையும் வரைக்கும் அவனது வயிற்றில் சொருகிவிட்டு நாங்கள் வந்துவிட்டோம்’’ இவ்வாறுதான் நபிகளாரை அவமானப்படுத்தியவனிடம் அவ்ஸ் கோத்திரத்தைச் சேர்ந்த முஹம்மத் பின் மஸ்லமா ரழியல்லாஹு அன்ஹுவும் அவரது குழுவினரும் நடந்து கொண்டார்கள்.[5]

இமாம் இப்னு தைமிய்யா ரஹிமஹுல்லாஹ் அவர்கள் ‘‘அஸ்ஸாரிமுல் மஸ்லூல் அலா ஷாதிமிர் ரஸுல்’’ (நபிகளாரை அவமதித்தவனுக்கு எதிராக உருவப்பட்ட வாள்) எனும் தனது நூலில் இன்னும் சில விடயங்களுடன் சேர்த்து இச்சம்பவத்தைக் குறிப்பிடுகிறார். முதலில் இமாம் இப்னு தைமிய்யா இச்சம்பவம் சம்பந்தமாக சீறா அறிஞரான அல் வாகிதியின் கூற்றை தனது நூலில் குறிப்பிடுகின்றார். காரணம் இச்சம்பவம் மதீனாவைச் சூழவுள்ள யூத சமுகத்தினருக்கு மத்தியிலும் காபிர்களுக்கு மத்தியிலும் மிகப் பெரும் அலையை ஏற்படுத்திய ஒரு சம்பவமாகும்.

வாகிதி இச்சம்பவத்தின் பின் விளைவுகளைக் குறிப்பிடுகின்றார்.

‘‘மறுநாள் காலையில் யூதர்கள் முஷ்ரிகீன்களோடு வந்து ‘எங்கள் தலைவரும் உயர்ந்த மனிதருமான கஅப் ரகசியமாகக் கொல்லப்பட்டுவிட்டார்’ எனக் கூறினார்கள். (அவர்கள் கூறியது - குதில கிலாக என்பதாகும். ‘கிலாக’ என்பது அறபியில் ரகசிய

[5] (புஹாரி பாகம் 5: ஹதிஸ் 361)

கொலையைக் குறிக்கும். அதாவது ஒருவர் ஆச்சரியமான விதத்தில் எந்த குற்றமும் செய்யாத நிலையிலும் தான் அறியாத நிலையில் கொல்லப்படுவதாகும். இது இருவர் பிடிக்கும் சண்டையும் அல்ல).

ஏன் கஅப் இப்னு அஷ்ரப் கொலை செய்யப்பட்டார்? என்பதே அவர்கள் நபிகளாரிடம் கேட்ட கேள்வி. ஏனெனில் நபிகளாருக்கும் எல்லா யூதர்களுக்குமிடையில் ஒரு உடன்படிக்கை காணப்பட்டது. மதீனாவிற்கு நபிகளார் வந்த போது யூதர்களோடு ஒரு உடன்படிக்கையை செய்து கொண்டார்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்த விடயம். இப்போது கஅப் இப்னு அஷ்ரப் கொல்லப்பட்டுவிட்டான். ஏன்? எவ்வாறு அது நடக்க முடியும்? என்கிற கேள்விகளுக்கு நபிகளார் என்ன பதிலளித்தார்?

நபிகளார் கூறினார்கள் **“அவனுடைய கருத்தைப் பின்பற்றுகின்றவர்களும் அல்லது அவனுடைய கருத்திலே இருக்கின்றவர்களும் மௌனமாக இருந்தது போல் அவனும் மௌனமாக இருந்திருந்தால் அவன் கொல்லபட்டிருக்கமாட்டான். ஆனால் அவன் எம்மை அவனது கவிதைகளால் ஊறு பண்ணி, அவமானப்படுத்தினான். இதனை உங்களில் எவர் செய்தாலும் அவர் வாளைத் தவிர வேறு எதனையும் கொண்டு நடத்தப்படமாட்டார்கள்[6]”.**

நபிகள் இவ்வாறு கூற வந்தது - கஅப் இப்னு அஷ்ரபின் உள்ளத்தில் நிராகரிப்புக் காணப்பட்டது போன்று பலரின் உள்ளங்களிலும் அது காணப்படுகின்றது. அதற்காக அவன் கொல்லப்படவில்லை. அதாவது அவனது குப்ருக்காக அவன் கொல்லப்படவில்லை. அவன் நபிகளாரை வெறுக்கிறான் என்பதற்காகவோ,முஸ்லீம்களை வெறுக்கிறான் என்பதற்காகவோ கொல்லப்படவில்லை. இவ்வகையான வெறுப்பு பலரின் உள்ளங்களின் இருந்தும் கூட அவர்களையெல்லாம் நாம் கொல்லாமல் விட்டு வைத்திருக்கிறோம். ஏனையவர்கள் மௌனமாக இருந்தது போல் அவனும் மௌனமாக இருந்திருந்தால், அவனை நாம் கொன்றிருக்கமாட்டோம். ஆனால் அவன் எங்களுக்கெதிராகப் பேசினான். எனக்கு எதிராகவும் பேசி என்னைக் கொச்சைப்படுத்தினான். உங்களில் யாராவது யூதனாக இருந்தாலும் சரி முஷ்ரிக்காக இருந்தாலும் சரி உங்கள் வார்த்தைகளைக்

---

[6] இமாம் இப்னு தைமிய்யாவின் ‘அஸ்ஸாரிமுல் மஸ்லூல் அலா ஷாதிமிர் ரஸுல்

கொண்டு என்னை அவமானப்படுத்த முயற்சித்தால் இவ்வழியில் தான் உங்களையும் நான் அணுகுவேன். இவ்விடயத்தில் உங்களுக்கும் எனக்கும் இடையில் வாளைத் தவிர வேறு எதுவும் இருக்காது. உங்களுக்கும் எங்களுக்கும் இடையில் உரையாடலோ மன்னிப்போ, உறவுப் பாலம் அமைப்பதோ சமரசம் செய்வதோ கிடையாது. உங்களுக்கும் எங்களுக்கும் இடையில் வாள் மட்டுமே இருக்கும். இதனை நபிகளார் தெளிவாகக் கூறிவிட்டார்கள்.

அதன் பின்னர் அவர்களை அழைத்து தனக்கு எதிராக அவர்கள் பேசக் கூடாது என்ற ஒப்பந்தத்தில் கைச்சாத்திடுமாறும் கட்டளையிட்டார்கள்.

இமாம் இப்னு தைமிய்யா கூறுகிறார் ‘‘அல்லாஹ்விற்கும் அவனது தூதரிற்கும் எவராவது ஊறுவிளைவித்தால் அவர்கள் முஸ்லீங்களோடு உடன்படிக்கை செய்து கொண்டவர்களானாலும் சரி அவர்களைக் கொல்ல முஸ்லீங்களை ஊக்கப்படுத்தும் ஒரு ஆதாரம் இச்சம்பவமாகும்’’.

கஅப் இப்னு அஸ்ரப் கொல்லப்பட்டதற்கான காரணம் நபிகளாருக்கு எதிராக யுத்தம் செய்யுமாறு நிராகரிப்பாளர்களை அவன் தூண்டியதற்காகவே அன்றி அவனுடைய வார்த்தைகளுக்காக அல்ல என்று சிலர் இந்த ஹதீஸின் கருத்தினை திரித்துக் கூற முயல்கின்றனர்.

இப்னு தைமிய்யா ரஹிமஹுல்லா அவர்கள் இச்சட்டத்திற்கு எதிராக முன்வைக்கப்படும் ஒரு சில வாதங்களுக்குப் பதிலளிக்கும் முகமாக இந்தச் சம்பவத்தைக் குறிப்பிடுகின்றார்.

இப்னு தைமிய்யா கூறுகின்றார் ‘‘இல்லை அவன் கொல்லப்பட்டது அவனது கவிதைகளுக்காகத்தான். அவை அவன் மக்காவிற்கு சென்று முஸ்லீம்களுக்கு எதிராக குரைஷியரைத் தூண்டுவதற்கு முன்னர் எழுதப்பட்டவை. அவன் முஸ்லீம்களுக்கு எதிராக போராடுவதற்கும் குரைஷியரைத் தூண்ட மக்காவிற்கு சென்றதற்குமிடையில் எந்தச் சம்பந்தமும் இல்லை. அவன் அவனது கவிதைகளுக்காகவே கொல்லப்பட்டான்’’.

அவர் மேலும் குறிப்பிடுகிறார் ‘‘கஅப் இப்னு அஷ்ரப் செய்தது எல்லாம் நாவினால் இழைத்த விபரீதங்களாகும். கொல்லப்பட்ட காபிர்களுக்காக அவன் துக்கம் கொண்டாடியமை, காபிர்களை யுத்தம் செய்யத் தூண்டியமை, நிராகரிப்பாளர்களின் மதத்தை உயர்த்தி இஸ்லாத்தைக் கீழே தள்ளிப் பேசியமை எல்லாமே நாவினால் நடந்தவையாகும். இவ்விடயத்தில் வாதிப்பவர்களுக்கு இதுவே ஆதாரமாகும். அல்லாஹ்வையும் நபிகளாரையும் தனது கவிதைகளினால் அவமானப்படுத்தும் எவரும் எதனைக் கொண்டும் பாதுகாக்க மாட்டார்கள் என்பது இதிலிருந்து தெளிவாகின்றது’’

இதுதான் கஅப் இப்னு அஷ்ரபின் கதையாகும். இதனை அவ்ஸ் கோத்திரத்தினர் செய்திருந்தனர். கஅப் இப்னு மாலிக்கின் புதல்வர் கூறுகின்றார் ‘‘ அவ்ஸூம் கஸ்ரஜூம் ஒருவருக் கொருவர் நபிகளார் முன்னிலையில் இரண்டு ஆண் குதிரைகளைப் போல் போட்டி போட்டுக் கொள்வார்கள். யாராவது ஒருவர் நபிகளாரைத் திருப்திப்படுத்த ஏதாவது ஒன்றைச் செய்துவிட்டால் மற்றையவர்கள் அதனை விட அதிகமாகச் செய்துவிட நினைப்பார்கள்’’.

அவர்களுக்கிடையிலான போட்டி பட்டங்களுக்காகவோ சொத்துகளுக்காகவோ அல்லது யார் சிறந்த வீட்டைப் பெறுவது, யார் அழகான பெண்ணைத் திருமணம் செய்வது, யார் சிறந்த வாகனத்தை வாங்குவது என்பதற்காகவோ அல்ல.அவர்களின் போட்டியெல்லாம் எவ்வாறு நபிகளாரை அதிகமாகத் திருப்திபடுத்துவது என்பதில்தான் இருந்தது.

இப்பொழுது கஸ்ரஜ் கூட்டத்தினர் ஒன்று கூடிக் கூறினார்கள் ‘‘அல்லாஹ்வின் எதிரி ஒருவனை அவ்ஸ் கூட்டத்தினர் கொல்வதில் வெற்றி பெற்றுவிட்டார்கள். நாமும் அதைப் போல் ஒன்றைச் செய்ய வேண்டும்’’ கஅப் இப்னு அஷ்ரபிற்குப் பின்னர் மிகவும் மோசமானவன் அபூ ராபி என்பவன் தான எனத்தீர்மானித்து அவனைக் கொல்வதாக அவர்கள் முடிவு செய்தார்கள்.

அவனைக் கொல்லும் திட்டத்தை நபிகளாருக்கு எத்திவைத்து அன்னாரின் அனுமதியையும் பெற்றார்கள்.இது அப்துல்லாஹ் இப்னு அதீக் ரழியல்லாஹு அன்ஹு தலைமையில் நடைபெற்றது.

அப்துல்லாஹ் இப்னு அதீக் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் திட்டம் தீட்டி அவனது கோட்டைக்குள் நுழைந்து அவனது படுக்கை அறைக்குள்ளும் நுழைந்து விட்டார்கள். அது மிகவும் இருட்டாக இருந்ததால் அபூ ராபியைக் காணமுடியவில்லை. அப்துல்லாஹ் இப்னு அதீக் 'அபூ ராபி, அபூ ராபி' என அழைக்க ஆரம்பித்தார். நடு நிசியில் கும்மிருட்டில் கொல்ல வேண்டிய எதிரியை அவனது படுக்கை அறைக்குள் நின்று கொண்டு அழைப்பது என்பது மெய்சிலிர்க்கச் செய்யும் விடயம். அபூ ராபி சப்தத்திற்கு பதிலளித்தான். அப்துல்லாஹ் இப்னு அதீக் கூறினார் "அவனின் சப்தம் வந்த திசையை நோக்கி வாளை வீசினேன். அது அவனைத் தாக்கினாலும் அவனைக் கொல்லவில்லை. உதவிற்காக அவன் அலறினான்"

அப்துல்லாஹ் இப்னு அதீக் துரிதமாகச் சிந்தித்தார். தன்னை விடுவித்துக் கொண்டு சற்று நேரத்தின் பின் மீண்டும் வந்து உதவ வந்தவனின் குரலைப் போன்று தனது குரலை மாற்றிக் கொண்டு அவனிடம் கூறினார். "அபூ ராபி உனக்கு என்ன வேண்டும்?". அதற்கு அபூ ராபி "உன் தாயின் மீது நாசம் உண்டாகட்டும். இங்கு யாரோ ஒருவன் என்னைக் கொல்ல முயற்சிக்கின்றான்" என்று கூறினான்.

அப்துல்லாஹ் இப்னு அதீக் கூறினார் "சப்தம் வந்த திசையை நோக்கி மீண்டும் வாளை வீசினேன் என்றாலும் அவனைக் கொல்ல முடியவில்லை. உதவி கேட்டு அவன் மீண்டும் கத்தினான்".

அவர் மீண்டும் சற்றுப்பின் வாங்கி வேறு ஒரு குரலில் பேசினார். ஏற்கனவே அபூ ராபி இரண்டு முறை தாக்கப்பட்டு இருந்தான். அப்துல்லாஹ் இப்னு அதீக் கூறினார். "எனது வாளை அவனது வயிற்றில் வைத்து முதுகெழும்பு உடையும் வரைக்கும் அழுத்தினேன். முதுகெலும்பு முறிந்ததால் அவன் கதையும் முடிந்தது".

அப்துல்லாஹ் இப்னு அதீக் பின்வாங்கி படிகளினூடாக இறங்கினார்."குழப்பத்தின் காரணமாக எல்லாப்படிகளும் முடிந்து விட்டது என நினைத்து மீதம் ஒரு படி இருக்கும் பொழுது காலை வைத்ததால் சறுக்கி எனது கால் உடைந்துவிட்டது. எனது சகாக்களிடம் நான் அவனைக் கொன்றுவிட்ட செய்தியைக் கூறினேன்.

எனினும் அதனை உறுதிப்படுத்துவதற்காக இங்கேயே நான் காத்திருக்கப் போகிறேன். நீங்கள் நபிகளாரிடம் சென்று அவன் கொல்லப்பட்ட செய்தியைக் கூறுங்கள்'' என்று கூறினார்.

தங்கள் வேலையை கச்சிதமாக முடிக்கவேண்டும் என்பதில் அவர்களின் உறுதி எத்தகையது என்பதைப் பாருங்கள். அவரின் கால் உடைந்திருந்தும் கூட எதிரியின் முதுகெலும்பை உடைத்துவிட்ட நிலையிலும் அவனது மரணச் செய்திக்குக் காத்திருக்குமளவிற்கு தனது வேலையை அவர் கச்சிதமாகச் செய்ய விரும்பினார்.

அதி காலையில் ஹிஜாஸின் வியாபாரி அபூ ராபி கொல்லப்பட்டுவிட்டார் என்ற செய்தி வெளியானது. அப்துல்லாஹ் இப்னு அதீக் இதனைக் கேட்டவுடன் என்ன கூறினார்?

''இவ்வகையான அத்துமீறலை நாங்கள் கண்டிக்கிறோம். இந்த மனிதருக்கு எந்தத் தீங்கும் இழைக்கப்பட்டிருக்கக் கூடாது. இது இஸ்லாமிய முறையல்ல''

அப்துல்லாஹ் இப்னு அதீக் இவ்வாறா கூறினார்? இல்லவே இல்லை.

அவர் கூறினார் '' அபூ ராபி இறந்த செய்தியைப் போன்று ஒரு இனிப்பான செய்தி ஒன்று இருக்கவில்லை. இதனை விட இனிப்பான வார்த்தைகளை எனது வாழ் நாளில் நான் கேட்டதேயில்லை''

அவர் மதீனாவை நோக்கி நகர்ந்தார். அவரைக் கண்ட நபிகளார் ''உம்முடைய முகம் வெற்றி பெறட்டும் என வாழ்த்தினார்கள்.அதற்கு அப்துல்லாஹ் இப்னு அதீக் ''உங்களுடைய முகமும் வெற்றி பெறட்டும் அல்லாஹ்வின் தூதரே'' எனப் பதிலளித்தார்.

இவ்வாறு தான் அவர்கள் அண்ணலாரை நேசித்தார்கள்.

இவ்விடயம் தொடர்பாக இன்னொரு சம்பவத்தினைப் பார்ப்போம்.

நபிகளார் மதீனாவை வெற்றி கொண்ட போது அப்புனிதப் பூமியை அமைதியாகக் கைப்பற்ற நாடினார். அங்கு இரத்தம் சிந்தப்படுவதை அவர் விரும்பவில்லை. பணிவோடும், அல்லாஹ்வுக்கு சுஜூது செய்த நிலையிலும், நன்றி செலுத்திய நிலையிலும் மக்காவுக்குள்

நுழைந்தார்.ஊர்வலமோ,பாட்டிசையோ இல்லை. கொலையோ, இரத்தம் சிந்தலோ காணப்படவில்லை. அங்கு முழு அமைதி நிலவியது. நபிகளார் குறைஷியரிடம் கூறினார்கள்.

“சுதந்திரமாகச் செல்லுங்கள்.நீங்கள் மன்னிக்கப்பட்டுவிட்டீர்கள்”

என்றாலும் நபிகளாரிடம் ஒரு கறுப்பு பட்டியல் இருந்தது. க∴பாவின் சீலையில் தொங்கிக் கொண்டிருந்தாலும் அவர்களைக் கொல்லுங்கள்[7] என்று கூறப்பட்டவர்களின் பட்டியல் அது. உலகில் மிகப் புனிதமான பூமி மக்கா. அதிலும் புனிதத்திலும் புனிதமான இடம் மஸ்ஜிதுல் ஹராமாகும்.யாராவது அதன் சீலையைப் பிடித்துக் கொண்டிருந்தால் அவரை விட்டுவிடுங்கள் என்றதொரு பழமொழி இருந்தது. அறியாமைக் காலத்தில் அது முஷ்ரிகீன்களின் ஒரு சட்டமாகவும் இருந்தது.

“க∴பாவின் சீலையில் தொங்கிக் கொண்டிருந்தாலும், அவரைக் கொல்லுங்கள்” என நபிகளார் கூறியவர்கள் யார்?

அந்தப்பட்டியலில் சிலரின் பெயர்கள் இருந்தன. அவற்றுள் அப்துல்லாஹ் இப்னு கதால் என்பவனும் அவனுடைய இரண்டு பெண் அடிமைப் பாடகிகளும் மற்றும் ஸாரா எனும் அபூலகபின் அடிமையும் உள்ளடக்கப்பட்டிருந்தனர். அப்துல்லாஹ் இப்னு கதாலிடம் இருந்த இரண்டு பெண் அடிமைகளும் நபிகளாருக்கு எதிராக வசைபாடும் நிகழ்சிகளை அரங்கேற்றியவர்கள்.அபூலபின் அடிமை உட்பட கொல்லப்பட வேண்டியவர்களின் பட்டியலில் அவர்கள் இருந்தார்கள். அப்துல்லாஹ் இப்னு கதால் உண்மையிலேயே க∴பாவின் திரைச் சீலையைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கும் போது நபித் தோழர் ஒருவர் கொன்றுவிட்டார். இவ்வடிமைப் பெண்களின் செய்தியை இப்பொழுது பார்ப்போம்.

அன்பார்ந்த சகோதர சகோதரிகளே, பெண்களைக் கொல்லக் கூடாது என்பது உங்களுக்கு நன்றாகத் தெரியும். அதனை நபிகளார் தடுத்திருந்தும் இப்பெண்களின் பெயர்கள் கொல்லப்பட வேண்டியவர்களின் பட்டியலில் இருந்தது.ஆனால் முஸ்லீங்களுக்கு எதிரான யுத்தத்தில் பெண்கள் பங்கெடுத்தால் அவர்களைக் கொல்ல

---

[7] இப்னு இஷாக்

முடியும். ஆனால் இப்பெண்ணடிமைகளோ அவற்றில் பங்குகொள்ளவுமில்லை.இவர்களைத் தவிர மக்காவில் உள்ள அனைத்து மக்களுக்கும் நபிகளார் பாதுகாப்பு அளித்திருந்தார்கள். மேலும் அப்பெண்கள் சுதந்திரம் அற்ற அடிமைப்பெண்களாக வேறு இருந்தனர். இஸ்லாமியத் தண்டனை முறையில் சுயவிருப்பம் என்பது முக்கிய பங்கினை வகிக்கின்றது. அடிமைகளுக்கு சுயவிருப்பு இல்லாத காரணத்தினால் அவர்களின் தண்டனைகளும் குறைக்கப்பட்டிருந்தன. இப்பெண்கள் சுயமாக விரும்பி வசைபாடவில்லை. அவர்களின் எஜமானர்களான அபூலஹப், பின் கதால் ஆகியோரால் அவ்வாறு செய்யப் பணிக்கப்பட்டிருந்தனர். என்றாலும் அவர்கள் கொல்லப்பட வேண்டும் என அறிவிக்கப்பட்டிருந்தது.

இதனைப் பற்றி இமாம் இப்னு தைமிய்யா கூறும் போது

‘‘எல்லாக் குற்றங்களையும் விட மிகப் பெரிய குற்றமாக நபிகளாருக்கு எதிராக வசைபாடுவது காணப்படுகின்றது என்பது உறுதியான, தெளிவான ஆதாரங்களிலிருந்து புலப்படுகின்றது. மக்கா வாசிகளுக்கு மன்னிப்பு வழங்கிய நிலையிலும் அவர்கள் பெண்களாகவும் அதிலும் அடிமைகளாகவும் இருந்தும் கூட அவர்கள் யுத்தம் செய்யாத நிலையிலும் மரண தண்டனை நிறைவேற்றப்பட வேண்டும் என அறிவிக்கபட்டிருந்தமை இது எத்தனை பெரிய குற்றம் என்பதைச் சொல்லிக் காட்டுகின்றது’’

அந்த பட்டியலிருந்த இன்னொருவன் தான் அல் ஹுயைரித் பின் நுகைத் என்பவனாகும். இவனும் தனது நாவினால் நபிகளாரைக் கொச்சைப்படுத்திக் கொண்டிருந்தான். அப்பொழுது அவன் வீட்டுக்குள் ஒளிந்து கொண்டிருந்தான். அலி பின் அபூதாலிப் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அவனது வீட்டிற்கு வந்து அவன் எங்கே எனக் கேட்ட போது அவன் மதீனாவுக்கு வெளியே பதிய்யா எனும் இடத்திற்குச் சென்றுவிட்டதாகப் பொய் கூறினார்கள்.

